ஸம்ஸ்க்ருதஸ்ரீ:

# ॥ संस्कृतश्रीः ॥

संस्कृतविद्यासमिति पत्रिका



SAMSKRTASRI

ஸம்ஸ்க்ருதஸ்ரீ

A Fortnightly Bulletin of the Samskrit Education Society, Madras.




Annual Subscription Rs. 8-00

Single Copy 0-40 Ps.

Life Subscription Rs. 100-00


9, Single Mall Street, Tiruchirapalli-620 002.

माला — 4 पुष्पम् — 3


वागीश्वर्यै नमः

पुस्तकजपवटिहस्ते
वरदाभयचिह्नचारुबाहुलते ।
कर्पूरामलदेहे
वागीश्वरि शोधयाशु मम चेतः ॥

௨

श्रीगुरुभ्यो नमः

# ॥ संस्कृतश्रीः ॥

कलि 5082—रौद्र-वृश्चिक-7 (4-3) 22—11—80

दयया यदीयया वाङ् नवरसरुचिरा सुधाधिकोदेति।
शरणागतचिन्तितदं तं शिवचिन्तामणिं वन्दे ॥

—अप्पयदीक्षितेन्द्राणां आर्याशतकात्

## श्रीसदाशिवब्रह्मेन्द्रकृतं महामायाहरीशीतलास्तोत्रम्

காஞ்சீ காமகோடி பீடத்தில் 57-வது ஆசார்யர்களாக இருந்து அருள்பாலித்து வந்த பரமசிவேந்த்ர ஸரஸ்வதீஸ்வாமிகளின் சிஷ்யரான ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ரர் யௌவன தசையிலேயே ஞானம் பிரகாசிக்க, ஜீவன் முக்தராக அவதூதராக விளங்கினர். தஞ்சை புதுக்கோட்டை திருச்சிப் பகுதிகளில் ஸஞ்சரித்தபோது அங்கெல்லாம் பல அற்புதங்களை நிகழ்த்தினர். கி. பி. 17ஆம் நூற்றாண்டு முழுதும் அதற்கு மேலும் வாழ்ந்து நெரூரில் ஜீவ ஸமாதியில் அடங்கினர். அவர் அருளிய அத்வைத கிரந்தங்களும் கீர்த்தனங்களும் பிரசாரமடைந்திருக்கின்றன.

அவர்கள் நிகழ்த்திய பல அற்புதங்களில் ஒன்று தஞ்சைக்குக் கிழக்கே எட்டாவது கிலோ மீட்டரில் உள்ள புன்னை நல்லூரில் மாரியம்மனை பிரதிஷ்டை செய்தது. அதற்குச் சான்றாக மாரியம்மன் கோவிலில் துவஜ ஸ்தம்பத்துக்கு முன் கோபுரத்தின் இடதுபுறம் சுவற்றில் ஸதாசிவப்ரஹ்மேந்த்ரருடைய அவதூத பிம்பம் காணப்படுகிறது.

அந்த அம்பாளைப் போற்றி அவர் ஸ்தோத்ரமும் அருளிச் செய்திருக்கிறார். நான்கு ச்லோகங்களில் அமைந்திருக்கும் அந்த ஸ்தோத்ரம் அம்பாள் அவர்களுக்கு பிரஸன்னமான அபூர்வ வைபவத்தை விளக்குகிறது.

அந்தக் காலத்தில் தஞ்சையில் மஹாராஷ்ட்ர மன்னர்கள் ஆண்டு வந்தார்கள். அரசர்கள் ஒருபுறம் தைவ பக்தியும் பெரியோர்களிடம் மரியாதையும் பூண்டிருக்க அரசரின் உறவினர் மாமன் மைத்துனன்மார்கள் — தான்தோன்றிகளாக — உறவுச் சலுகையை உபயோகப்படுத்தி அதிகாரிகளின் துணை கொண்டு நாட்டில் அட்டூழியம் புரிந்தனர். நிலத்தில் உழுது பயிரிடும் குடி படைகளுக்கும், வேதமே வாழ்க்கையின் செல்வமாகக் கொண்ட அந்தணர்களுக்கும் அவர்களால் துன்பம் ஏற்பட்டது. இது பொறுக்காமல் வாஞ்சேச்வர கவி அவர்களைப் பழித்து மஹிஷ சதகம் எழுதினார்.

அப்போது ஸதாசிவப்ரஹ்மேந்திரர் தஞ்சைக்குக் கிழக்கே உள்ள புன்னைமரக்காட்டில் தங்கி இருந்தார். ஒருநாள் பட்டப் பகல். நல்ல வெயில். சீதோஷ்ண உணர்ச்சிகளைக் கடந்த அவதூதர்களான ஸ்வாமிகளுக்கு அந்தக் காட்டில் திடீரென்று சுட்டெரிக்கும் ஒளி தென்பட்டது. ஆகாயத்தைப் பார்த்தார். அந்தப் பரவெளியில் ஒரு மேகம் தெரிந்தது. அதை ஊடுருவி சூரியனின் ஒளி பாய்கிறது. அங்கே ஓர் உருவம். கொழுந்து விட்டெரியும் ஜ்வாலையே கிரீடமாகத் தெரிகிறது. அதற்கு கீழே ஒரு முகம் புறாவின் உடலைப் போன்ற நிறம், செம்மையும் கருமையும் கலந்து படர்ந்து ஒளிர்கிறது. முகத்தில் கடுமையும் தெரிகிறது. குளிர்ச்சியும் தெரிகிறது. கடுமை கொடியோர்கள் பால் பாய்கிறது. குளிர்ச்சி பலவீனர்களிடம் கருணையாகப் பொழிகிறது. கோரமும் கருணையும் ஒருங்கே துலங்கும் அந்தஸ்வரூபம் ஸ்வாமிகளின் கண் களிலே பாய்ந்து அவர்களுடன் ஐக்யம் ஆகிவிடுகிறது. அந்த தேவியை—தன்னுள்ளமான ஆனந்த ஜோதி வெளியில் கருணை வெள்ளமாகப் பாய்ந்து உலக மாயையெல்லாம் அகற்றும் மஹா மாயாஹரீ சீதலா என்ற ஸ்வரூபத்தில் கண்டு போற்றுகிறார் ஸ்வாமிகள்.

चिद्व्योमन्यभिचारिदे तपनभाविद्योतिते प्रज्वलत्-
ज्वालामञ्जुकिरीटिनी मृदुकपोताङ्गारुणास्यप्रभा ।
दुष्टे तीक्ष्णतमाऽबलेऽतिकरुणा ज्ञानिन्यभेदं गता
चिज्ज्योतिः करुणोज्ज्वलाऽवतु महामायाहरी शीतला ॥

அந்த தேவி யார்? மரயானையைப் பார்த்து குழந்தை யானை என்று பயந்து எட்ட நின்று தொட்டுப்பார்த்து ஏறி உட்கார்ந்து மகிழ்கிறது. நாம் யானை எந்த மரத்தில் செய்யப்பட்டது? லேசா? கனமா? என்றெல்லாம் கவனிக்கிறோம். குழந்தைக்கு மரம்

தெரியாது. நமக்கு யானை தெரியாது. அதுபோல ஞானிகளான ஸதாசிவப்ரஹ்மேந்த்ரருக்கு நமக்குத் தெரியும் பிரபஞ்சம் தெரியவில்லை. எங்கும் நிறைந்த பரம்பொருள் தெரிகிறது. பிரபஞ்ச விளையாட்டு விளையாடும் ஆதிபராசக்தி ப்ரத்யட்சமாகத் துலங்குகிறுள். உலகமாக விரிந்து — ஸத்வம் ரஜஸ் தமஸ் — என்ற முக்குணப் போர்வை போர்த்தி, ஜீவர்களை மயக்கி, பிரபஞ்சத்தில் விளையாட விட்டு வேடிக்கை பார்க்கிறுள். அப்படி விளையாடும் ஜீவர்களில் சிலர் முரட்டு குணம் படைத்தவர்களாகத் தன்னை (தேவியை) மறந்து விளையாட்டு விதிகளை மீறி உலகில் அக்கிரமங்கள் செய்ய முற்படும்போது அவர்களுக்குள்ளே ரோகமாகப் புகுந்து அழலைப் பரப்பி கொப்புளங்களை உண்டாக்கித் தன்னை உணர்த்தி வைக்கிறுள். அப்படி அவள் புகுந்த உடலிலே மற்ற வியாதிகள் புகாமல் கருணையோடு உடலைச் சுத்தப்படுத்துகிறுள். அந்தக் கருணை வடிவினள் தான் தன்னுள்ளே புகுந்தாள் என்று அறிகிருர் ஸ்வாமிகள்.

या देवी भवविस्तरे त्रिगुणसंभेदेन जीवानहो
व्यामोह्यातिविचित्रलोकरचनालीलासु संसज्जति ।
सैवातिक्रमलुब्धदुष्टहृदयान् आवेष्टि रुग्बुद्बुदैः
चिज्ज्योतिः करुणोज्ज्वलाऽवतु महामायाहरी शीतला ॥

அப்படித் தன்னிடம் ஐக்யமாகி உள்ளத்தில் பிரகாசிக்கும் தேவியை "இப்படித் தோன்றக் காரணம் என்ன? என்று கேட்கிருர் ஸ்வாமிகள். தேவி சொல்லுகிறுள் "அரசனை அண்டிப் பிழைக்கும் பதர்கள் அந்தணர்களுக்கும் உழுது பயிரிடும் குடிபடைகளுக்கும் வியாபாரிகளுக்கும் துன்பம் இழைக்கிருர்கள். அது பொறுக்காமல் உக்ரகலையுடன் தோன்றினேன்"

देवी धूर्तनृपाश्रितैः अविनयेनार्तेषु चात्याहितं
विप्रेष्वाचरितं कुलेषु कृषिवाणिज्यादिवृत्तिष्वपि ।
सैवोग्रा प्रबभूव चिद्गगनतो याऽस्मत्समक्षं स्वतः
चिज्ज्योतिः करुणोज्ज्वलाऽवतु महामायाहरी शीतला ॥

ஞானப் பிழம்பான ஸ்வாமிகளுக்கு கருணை மேலிடுகிறது. "தாயே உன் செல்லக் குழந்தைகள் அறிவிலிகள். அவர்களை நீதான் காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டுகிருர். "அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று தேவி வினவுகிருள்.

"அம்மா! உன் கருணையே பூர்ணமாக வெளிப்பட வேண்டுமென்று நான் மண்ணைப் பிசைகிறேன், இதற்கு ஆனந்தமே ஈரச்சாந்து. இந்தப் புன்னைவனத்தில் இந்த பிம்பத்தில் ஞானஸுகமாக நீ அமரவேண்டும். எனக்குக் காட்சி அளித்த முறைக்குச் சான்ருக கோரப் பற்களையும் அமைக்கிறேன். அதற்கிடையே உன் புன்னகை தவழ வேண்டும். உன் ஸ்வரூபத்திலிருந்து ஆனந்தம் பொங்கிப் பெருகவேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

"ஜீவன் முக்தரான உங்கள் இஷ்டம் பரப்ரஹ்மத்தின் இஷ்டமல்லவா? அது நிறைவேருமல் போகுமா? அப்படியே அமைகிறேன்" என்று அருள் பாலித்தனள் அன்னை மஹாமா(யாஹ)ரீ.

सा पुन्नागवनेऽद्य दीनमनुजक्षेमाय दंष्ट्रोज्ज्वलाऽ-
ऽप्याद्रानन्दसुधासुबिंबनिलया भीमा सुमन्दस्मिता।
आसीना सुखसंविदि प्रसृमरानन्दा प्रतिष्ठापिता
चिज्ज्योतिः करुणोज्ज्वलाऽवतु महामायाहरी शीतला॥

இந்த நிகழ்ச்சியை உள்ளடக்கி அமைந்த இந்த ஸ்தோத்ரம் ஜீவன் முக்தர்களாகப் பரவெளியில் வாழும் சதாசிவ ப்ரஹ்மேந்திராளின் கருணையினுல் கிடைக்கப்பெற்று வெளியிடப் படுகிறது. தொகுத்தவர்: ஸ்வாமிநாத ஆத்ரேயன்

## 'व्यतिषजति पदार्थानान्तरः कोऽपि हेतुः' (२)

शे. श्रीनिवासशर्मा, अण्णामलैनगरम्

१ कपिशघनकलापालोकनान्नष्टवेगा
वियति विवशचित्ता बद्धमाला बलाकाः।
क्षणसुखमनिमित्तं संलभन्ते; वलन्ते
व्यतिषजति पदार्थानान्तरः कोऽपि हेतुः॥

१० कलितकलविरावा दन्तिकर्णान्तनिर्य -
    द्बहलमदझरीनिघ्राणलोला भ्रमर्यः ।
असकृदभिपतन्ति प्रात्तगन्धा इवान्धाः
    व्यतिषजति पदार्थानान्तरः कोऽपि हेतुः ॥

११ शरदि विहितमाला विस्मृतश्रान्तवर्षाः
    कृतहरिहरभूषां जाह्नवीं हंसमालाः ।
ननु कथमिह केनाप्यप्रयुक्ताः प्रयान्ति ?
    व्यतिषजति पदार्थानान्तरः कोऽपि हेतुः ॥

१२ दिवसक्षिपितभासो नक्तमाचान्तधातूः
    स्वयमधिगतबोधा ओषधीः स्वप्रभासाः ।
तदपि च ननु सत्यं ?—यत्प्रयान्ति प्रकामं
    व्यतिषजति पदार्थानान्तरः कोऽपि हेतुः ॥

१३ स्थिरतमनिजबोधं प्राक्तनाः पुण्यविद्याः
    सुलभपठनपाठाः प्रादुरायान्ति काले ।
इदमिह निगदाख्यातं–यदस्मिन् प्रघट्टे
    व्यतिषजति पदार्थानान्तरः कोऽपि हेतुः ॥

१४ इदमपि खलु सत्यं विस्तरान्नास्ति वाच्यं
    यदिह शलभकीटा दीपिते दीपसूत्रे ।
अहमहमिकया खल्वाग्रहात्संपतन्ति
    व्यतिषजति पदार्थानान्तरः कोऽपि हेतुः ॥

१५ नवनवविषयाणां गुम्फने मन्दवेगा
    प्रथितकविवराणां क्षुण्णमार्गे चरन्ती ।
मतिरपि रतिमेतना मामकीना शयाना
    सुखयति यदि वा वः स्वापयित्री न जाने ॥

# नमस्सभाभ्यः

शे· श्रीनिवासशर्मा, अण्णामलैनगरम्

श्रीमति रुद्राध्याये रुद्राः सभा, इति सभापतय इति चोपवर्णिताः तेभ्यो नम इति। रुद्रा अधिभूमि सहस्रशस्सन्ति। अत एव मन्ये सभा अपि सहस्रशः इदानीमपि। तत्तत्सभानामन्यान्ये सभापतयः। यस्सभा-पतिस्स एव सभा कुत्रचित्। न जाने, तत्र सभ्यानां कुतो नास्ति संभावनेति।

प्रतिनगरं, प्रतिग्रामं, प्रतिपल्लि, प्रतिकार्यालयं, प्रत्युद्योगस्थानं च कति सभास्समुल्लसन्तीति न शक्यते वक्तुम्। बहुरूपा बहुनाम्न्यश्च ताः। काश्चित्परस्परं भिन्ननाम्न्योऽपि समानलक्ष्याः। काश्चित्तु समान-नाम्न्योऽपि परस्परं प्रतिरोधिन्यः। कतिचित्तु किंचिदिव भिन्नस्वरूप-लक्ष्याः। कतिचिन्नियतस्थितयः काश्चिदुत्पन्नविनष्टाः। विश्वमिदं यथा, तथाभूताभिः सभाभिः सभापतिभिश्चाभिव्याप्तम्। विश्वरूपस्य महेश्वरस्य कियत्सत्यं सभात्वं सभापतित्वं च।

'सङ्गच्छध्वम्, संवदध्वम्, सं वो मनांसि जानताम्' इति ऋग्वेदे प्रस्तूयते। न केवलं मनुष्या यावत्तिर्यञ्चोऽपि सभां सङ्घं च आद्रियन्ते। प्रत्यूषेषु चैत्यवृक्षेषु पक्षिणां सकलकलारवं सभा प्रवर्तते। ग्रामेषु श्वानः पञ्चायतेषु भषन्ति। गावो महिषा अपि प्रचारभूमिषु सभामभिलषन्ति। एवं जातिगुणकर्मविभागशः मनुष्यपशुपक्षिमृगादीनां सभा दृश्यन्ते।

एवमेव नचिरादस्मत्प्रान्ते कुत्रचित् मशकमत्कुणयूकानामपि सभास्समायोजिताः। तदुपलक्षे प्रथमं प्रान्तीयमहासम्मेलनमपि सङ्घटितम्। तत्र यथामनुष्यसम्प्रदायं, कश्चित्सभापतिर्निर्वाचितः।

श्रीमान्मद्रपुरीयमत्कुणः एतन्महासम्मेलनस्याध्यक्षो बभूव। श्रीमान्कुम्भघोणमशकः कार्यदर्शी। अन्ये चिदम्बरपञ्चनदप्रसिद्धा मशकाः, सर्वतः प्रसृता मत्कुणा यूकाश्च सभ्या अभूवन्। तत्तन्नगरग्रामसङ्घेभ्यस्सहस्रशः प्रतिनिधयस्सकुतूहलं समवेताः। पिपीलिकानामेतावता सभा काचिन्नास्ति कुत्रचित्। अतः, इतः परमचिरादायोक्ष्यमाणायाः पिपीलिकासभायाः प्रथमायोजिका पिपीलिका प्रत्येकमाहूता कुशाग्रबुद्धिः पर्यवेक्षणाय रङ्गे प्रथमपंक्तौ साटोपमुपविष्टा। सर्वेऽपि यथास्वमासनेषु सुखमुपाविशन्। पञ्चनदमशकस्य प्रार्थनागीतानन्तरं सम्मेलनं प्राक्रमत। कार्यदर्शी कुम्भघोणमशकः सर्वान् सधन्यवादं स्वागतेन सभाजयामास। ततोऽध्यक्षः मत्कुणः संक्षिप्तमपि समावर्जकं, समुत्तेजकं च भाषणमकरोत्। अयं तस्य भाषणांशः—"सवयसः। वयमद्य सङ्घीभूताः कालत्रितययोग्याः समानरूपनामगुणा वर्तामहे। अस्माकमेका जातिः, एको देवः रक्तबीजः, सभ्यतापि समाना। पाञ्चभौतिकप्रपञ्चस्य स्वेदादूष्मणश्च वयमुपजाताः। मनुर्व्यासादयश्चास्मानुद्दिश्य वर्णयन्ति। मनुष्यमात्रे शुद्धं यद्वस्तु रक्ताख्यं तदेवास्माकं अन्नं पानीयं च। आसेतुहिमाचलं (परिच्छेदोऽयं अस्माकमाधुनिकपरिज्ञानमनुसृत्य!) वयं प्रसृताः। असभ्यमनुष्यजनतायां अधुना प्रचार्यमाणस्सन्ततिविच्छेदः नास्माकमभिमतः। वस्तुतः, 'प्रजातन्तुं मा व्यवच्छेत्सीः' इति उपनिषद्वाक्यं शतशः कर्मणा वयमेवानुवर्तामहे; न मनुष्याः। (करघोषः हैङ्कारश्च) मनाक्पश्यत! चिन्तयत! संख्यायामस्मत्तोऽल्पीयांस एते मनुष्या नामास्माकमाजन्मपरिपन्थिन इति लाघवमेतत्। कारणं तु ज्ञातमेव—यदेते यदा यदाऽन्यग्राः, तदा भयचकितास्सेवकाः प्रभुमिव, निभृतमुपसृत्य, अनाहूतोऽतिथिरिव पश्चात् पार्श्वयोर्विलम्ब्य, शनैस्समयं परिपाल्य, जिह्विकया लेहनेन (दंशनेन इति ते वदेयुः) यत्किंचित्पुष्पादिव मधु मक्षिका, वयं तेषां रक्तमापिबामः

इति । नेयं प्रतारणा ; नापि तादृशं पापकृत्यं यादृशं मनुष्याणाम् । ते हि समक्षमेव न केवलं स्वप्रभून् , जीवनदातॄन् , मित्राणि, प्रत्युत .... न .... न .... मम जिह्वा जिह्रेति .... (सधैर्यमुच्यताम् सधैर्यमुच्यताम् ) .... पितरं गुरुमपि छुरिकाघातं निहत्य तेषां स्वमाददते । (लज्जावहं लज्जावहम् ) .... अन्यच्च, देवालयेषु परमपावनैर्मन्त्रैः प्रतिष्ठापितानां पूजनीयानां देवप्रतिमानां कवचाभरणानि, प्रतिमा अपि भक्तैः परिकल्पिताः, क्षणेन हन्त हरन्ति ! इतः पापमन्यद्विद्यते ? .... भवतु । अस्माकं जीवनयात्रायां प्रतिघातं यदेते कुर्वते मनुजपशवः नैतन्न्याय्यम् । अधुना हि बहुभिर्विज्ञानमार्गैरेते, अस्माकमुत्पत्तिं, प्रसारं, व्यवसायं, जीवनवृत्तिं च प्रतिरुन्धति । विषयेऽस्मिन् संभूयास्माभिः काचन प्रतिक्रिया करणीया । यथापूर्वं वयमस्मिन् ब्रह्माण्डकरण्डे यथोच्चैःशिरसः स्थिरवृत्तयो भवेम तथा यतनीयम् । ‘ सङ्घे शक्तिः कलौ युगे ’ । यदि वयं, अनुलङ्घनीयं शपथं, अनशनं वा (नाममात्रेण !) स्वयमूरीकृत्य प्रवर्तामहे, तर्हि के एते वराकाः नः प्रगतिं प्रतिरोद्धुमन्यथयितुं वा ? उत्तिष्ठत ! जाग्रत ! नमस्सभाभ्यः । ”

अध्यक्षभाषणानन्तरं बहव इतस्ततस्समागताः प्रतिनिधयः मशकाः, मत्कुणा यूकाश्च स्वं स्वमभिप्रायं प्रतिपेदिरे, कर्तव्यं प्रतिक्रियारूपं च स्फुटयामासुः । पिपीलिकाऽपि तारस्वरेण किमप्यालपितुं प्रारभत ; परं मध्येसभं उपक्रान्तैः करतालैः स्थगिताऽभूत् । आसायमेवं सम्मेलनकार्यं साघोषं प्रवर्तितम् । बहवः प्रस्तावाः कूलङ्कषमालोचिताः स्वीकृताश्चैकमत्येन । तत्र मुख्याः केचन प्रस्तावा एते :—

(१) ते महामनसः हार्दधन्यवादैः संस्मियन्ते सम्मान्यन्ते चास्मिन्सम्मेलने—(क) ये, आत्मनः स्वेदेन प्रादुर्भाव्य, शरीरे रक्षितं रक्तं परोपकारैकमनसा वितीर्य, स्वकुटुंबपोषमस्मान्पोषितवन्तः । (ख)—न केवलमादिकाल इव स्त्रियः, पुमांसः युवानोऽप्यद्यत्वे हिप्पीसदृशाः

असंयतदीर्घशिरोरुहाः सन्न्यास इव यूकानस्मदीयान् ये ममत्वभावनया संरक्षन्ति, (ग) ये वा महात्मानः अस्मन्मशकसहोदराणां जिह्वास्पर्शमविगणय्य, रक्तबिन्दूंस्तेभ्यो दत्वा, आत्मापदानसाक्षित्वेन गजपादानावहन्ति, (घ) ये वा उत्तमर्णा इवाकुदशुचिभिः वस्त्रशयनप्रच्छदादिभिः अस्मन्मत्कुणकुलमुज्जीवयित्वा अधमर्णान्नः संभावयन्ति।

(२) ये तु केचिदर्वाचीनाः मनुष्यापशदाः प्रत्नैर्नूत्नैश्च विविधैरुपायैः अस्मानुच्छेत्तुं प्रयतन्ते ते खण्डनार्हाः।

(३) मद्रमहानगरपालिका, राज्यशासकाश्च सादरं प्रार्थ्यन्ते—(क)–यदेतावता 'कूवं' नदीद्वारा, नानायन्त्रालयसिनेमाधूमशकटादिद्वारा च यन्महासौभाग्यमस्मभ्यं प्रदत्तं तदायतावपि अविच्छिन्नरीत्या प्रदीयताम्। (ख)—यदुक्तैर्मनुष्यप्रतिरोधनैरस्माकं वृत्तिर्न सुसंपादा इति हेतोः, इतःपरं यथा आशुभद्रयादि (ஆஸ்பத்திரி) स्थलेषु रक्तसञ्चयिकायाः अपेक्षकेभ्यः यावदपेक्षं रक्तं दीयते, तथाऽस्मभ्यमपि रक्तं प्रदाप्य सहकारिणो भवन्त्विति। (ग)—यन्मशकमत्कुणयूकादिषु कश्चिदपि मध्यमायुः गुग्गुलुधूपादिना, हस्ताघातादिना वा अल्पायुः अकालमृतो वा क्रियते, तर्हि तत्संबन्धिनो, यथा मनुष्याणां विषये अकालमृतौ शासनेन किंचित्प्रतिकरणं दीयते, तथा पणस्थाने रक्तबिन्दवः दीयन्ताम् .... इत्यादि .... इत्यादि ....।

सर्वसंमत्या इदमपि निर्धारितम्—'अदागामिप्रान्तीयमहासंमेलनं मद्रनगरे कैरविण्यां 'कूवं' नदीतीरे सोत्साहं सपरिवाहं चाघोषयिष्यते' इति। (हस्ततालस्सर्वत्र)

ततः कार्यदर्शिकुम्भघोणमशकेन वन्दनोपचारे कृते, मङ्गलं चिदम्बरमशकेनैवं गीतम्— जीवेम शरदश्शतम्,
नन्दाम शरदश्शतम्,
मोदाम शरदश्शतम्॥

# संस्कृतश्रीविजयम् –(२) कथाकालक्षेपः

शिरोमणिः ना. वेङ्कटरमणः, बी. काम्., तञ्जापुरी

भो सभ्याः सावधानं चिन्तयत। पद्यमिमं कः अरचयत् ? யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவதெங்கும் காணோம் —इति यः उद्घोषयत् स एव भारती। तत्रापि को वा विशेषः इति चेत्, सः न स्ववाचा संस्कृतभाषायाः श्रैष्ठ्यं प्रकाशयति किन्तु, तमिलभाषामातृवचनदंभेन। अनेन किं ज्ञायते ? द्राविडभाषायाः संस्कृतभाषैव अतिप्राचीना, अत्यधिकवृद्धिं गता, अतुल्यमहिमा चेति। उपमानपदार्थः सर्वदा श्रेष्ठः एव भवेत् खलु !! सा द्राविडभाषा निजसखीं प्रति गानरूपेणैव वदति—

वसन्ता रागः — आदितालः

पल्लवम्

अहह चेटि मम भाग्यं नहि नहि जाने कियदक्क। (—)

अनुपल्लवम्

वृद्धिं गताऽहं सुरवाण्या—
सममधुना भुवि तत्कृपया (—)

चरणम्

कति कति भाषाः मम पश्चात्
तिष्ठन्ति दीनाः पश्याक्क।
सुरवाग्ग्रन्थाः सर्वेऽपि
मद्वचने सखि सन्त्यद्य॥ (—)

इयं च गुणोन्मुखी संस्कृतश्रीः कलशाम्बुधेः चन्द्रबिंबादोषधीप्राणदातृत्वं, ऐरावतात् गतिगांभीर्यं, उच्चैःश्रवसः पदक्रमवैदग्ध्यं, कौस्तुभमणेः स्वयं प्रकाशित्वं पुरुषोत्तमाश्रयित्वं च, मद्यात् उद्दीपनत्वं, हालाहलात् गिरीशकण्ठनित्यवासित्वं, अप्सरस्स्त्रीभ्यः मनोह्लादकरत्वं, इत्थैतां निजसोदरसोदरीगुणमतल्लिकां गृहीत्वैव भाषामहाराज्ञी विलसति।

अस्यामेव भाषायां चत्वारो वेदाः, अष्टादश स्मृतयः उपस्मृतयः, शिक्षा, कल्पसूत्राणि षट्, व्याकरणानि नव, वैदिकशब्दनिर्वचनैकफलानि निरुक्तानि, ज्योतिश्शास्त्रग्रन्थाः, अष्टादश पुराणानि, उपपुराणानि, न्यायवैशेषिकशास्त्राणि, मीमांसा-वेदान्त-सांख्य-योग शास्त्राणि, आयुर्वेद-धनुर्वेदगान्धर्ववेदाः भरतशास्त्र-मन्त्रतान्त्रिक शास्त्र-शिल्पशास्त्र-कामशास्त्रादीनि बहूनि शास्त्राणि, महाभारतादीतिहासग्रन्थाः, रामायणादीनि काव्यानि, नाटकचम्पूगद्याख्यायिकाकथाग्रन्थाः, असंख्यालंकारशास्त्राणीति बहवः निस्तुलाः सरसाः शब्दार्थगंभीराः ग्रन्थाः भवन्ति। इत्थं सकलवचनमातरं शरणं गच्छति कश्चित् संस्कृतप्रणयी।

आभोगिरागः आदितालः

पल्लवम्

पाहि मां जननि! सरस्वति!

अनुपल्लवम्

जाने नहि नहि शरणं त्वां विना
मां कुरु संस्कृतं संस्कृतमातः। (—)

चरणम्

चोदय धिषणां मम सन्मार्गे
शोधय वाचं मानसं चाम्ब
दापय संपदं कीर्तिममितां शुभे
कारय संस्कृतसाहित्यरत्नानि (—)

लोके संस्कृतभाषाश्रयेणैव अन्याः भाषाः मान्याः संभाविताश्च विलसन्ति। पश्यत — "वीथ्यां शिबिकारूढः परमेश्वरः पुःप्रवेशं करोति। सर्वे वयं भगवद्दर्शनं कुर्मः, शिबिकाः प्रदक्षिणं कुर्मः। वीथ्यामेव नमस्कारांश्च कुर्मः। अत्र असत्कृतप्रदक्षिणनमस्कारादयः भगवन्तं परमेश्वरमुद्दिश्य वा उत शिबिकावाहकान् भृत्यानुद्दिश्य वा? तथैव, संस्कृतभाषासंबन्धादेव अन्याः अपि भाषाः पूज्यतां मान्यतां च भजन्ते"।

संस्कृतभाषानामश्रवणादेव असत्स्मृतिपथं आरोहति कालिदासः। सः प्रसङ्गात् कुमारसंभवकाव्ये संस्कृतभाषायाः श्रेष्ठ्यं सूत्ररूपेण विशदीकरोति।

प्रभामहत्या शिखयेव दीपस्त्रिमार्गयेव त्रिदिवस्य मार्गः।
संस्कारवत्येव गिरा मनीषी तया स पूतश्च विभूषितश्च॥ (अनुवर्ति)

மதுரையில் திருமலைநாயக்க மன்னரால் கட்டப்பட்ட அரண்மனையின் ஒரு பகுதியான திருமலைநாயக்கர் மஹாலை, 1981 ஜனவரியில் நடக்கப்போகும் உலகத் தமிழ்மா நாட்டை ஒட்டி, அழகுபடுத்தும் வகையில் தமிழ்நாடு மாநில அரசு தீவிர முயற்சி எடுத்துள்ளது.

* * * * * *

அண்மையில் கேரள ஸாஹித்ய அகாடமியின் வெள்ளி விழாவை திருச்சூரில் துவக்கிவைத்து பிரதமர் மாத்ருஸ்ரீ இந்திரா காந்தி, 'நாட்டிலுள்ள பல இலக்கிய கலாசார ஸ்தாபனங்களிடையே ஒத்துழைப்பு, இணக்கமாகச் செயல்படச் செய்யத் தேவையான எல்லா உதவிகளையும் மத்திய அரசு அளிக்கும்' எனக் கூறியுள்ளார்.

* * * * * *

சென்னையில் 9—11—80 தினம் நடந்த ஸி. பி. ராமஸ்வாமி அய்யரின் நூற்றாண்டு விழாவிற்குத் தமிழ்நாடு முதல்வர் திரு. எம். ஜி. ராமச்சந்திரன் தலைமை தாங்கினார். உபராஷ்டிரபதி திரு. ஹிதயத்துல்லா சிறப்புரை ஆற்றினார். மற்றும் தமிழ்நாடு ஆளுனர் திரு. சாதிக் அலியும் மற்றும் பலரும், ராமஸ்வாமி அய்யரின் திறமைகளையும், அவரது தொண்டுகளையும் பற்றிப் பேசினர். சி. பி. ராமஸ்வாமி அய்யர் அறக்கட்டளைக்காக சென்னையிலுள்ள ராமஸ்வாமி அய்யரின் மாபெரும் வீட்டையும் அதைச் சுற்றியுள்ள மாபெரும் தோட்டத்தையும் அர்ப்பணித்துள்ள ஸி. பி. யின் மைந்தர் ஸ்ரீ C. R. பட்டாபிராமனுக்கு முதலமைச்சர் பொன்னுடை அணிவித்தார். முன்னர், திரு. சித்ராநாராயணஸ்வாமி வரவேற்புரை நிகழ்த்த, ஸி. பி. அறக்கட்டளைக் காரியதரிசி திரு. எஸ். விஸ்வநாதன் அறிக்கை படித்தார்.

* * * * * *

திருச்சி ஜில்லா நஞ்சைப்புகளூரில் 17—11—80, 18—11—80 தேதிகளில் மஹாகணபதி ஹோமம், காயத்ரி ஹோமம், வேதபாராயணம், ஹரிகதை முதலிய நிகழ்ச்சிகளுடன், ஸ்ரீ யாக்ஞவல்க்ய ஜயந்தி மஹோத்ஸவம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

* * * * * *

1980 பிப்ரவரி முதல் ஜுன்வரை மேற்கு ஜெர்மனியில் 5000 இந்தியர்கள் குடியேறியுள்ளனர்.

* * * * * *

சென்னை பல்கலைக் கழகத்துடன் ஸம்ஸ்க்ருதத்தில் டிப்ளோமோ படிப்பிற்கு இணைவுபெற்று அத்தகைய வகுப்பு ஒன்றை ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கநாத பாதுகா வித்யாலயத்தின் மூலம் திருச்சியில் நடத்த ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

௨

श्रीगुरुभ्यो नमः

# ॥ संस्कृतश्रीः ॥

पाठमाला अनुबन्धः ७३ பாடமாலா தொடர் 73

## त्रिणवतितमः पाठः—பாடம் 93 (தொடர்ச்சி)

### कर्मणि प्रयोगः—விளக்கம் 5 (தொடர்ச்சி)

7 वृक्षारोहः दश वृक्षान् फलानि अवाचिनोत्।

மரமேறி 10 மரங்களை (ளிலிருந்து) பழங்களை பறித்தான்.

स्त्रियः आरामेषु चायावीरुधः चायांकुराणि अवचिन्वन्ति।

பெண்கள் தோட்டங்களில் தேயிலைச் செடிகளை (ளிலிருந்து) தேயிலைத்தளிர்களைப் பறிக்கிறார்கள்.

8-9 आचार्यः अन्तेवासिनं हितं ब्रवीति/शास्ति।

ஆசிரியர் மாணவனை (னுக்கு) நன்மையை கூறுகிறார்/ போதிக்கிறார்.

10 शकुनिना सहकृतः दुर्योधनः द्यूते धर्मपुत्रं राज्यं भ्रातृन् पत्नीं द्रौपदीं च अजयत्।

சகுனியால் உதவப்பட்ட துர்யோதனன் சூதாட்டத்தில் தர்மபுத்திரரை (ரிடமிருந்து) அரசரையும் தம்பிகளையும் மனைவியான துரௌபதியையும் வென்றான்.

11 विष्णुः क्षीरसमुद्रं सुधां मथ्नाति स्म।

விஷ்ணு பாற்கடலை (லில்) அமிருதத்தைக் கடைந்தார்.

यशोदा दधि नवनीतं अमथ्नात्।

யசோதை தயிரை வெண்ணெயைக் கடைந்தாள்.

तैलकारः खर्परं तैलं मथ्नाति।

வாணியர் கொப்பரையை (எண்ணெய்) ஆட்டுகிறார்.

12 अद्यत्वे धूमशकटेषु लुण्टाकाः यात्रिकान् धनानि भूषणानि च मुष्णन्ति ।

இந்நாட்களில் ரயில் வண்டிகளில் கொள்ளைக்காரர்கள் பிரயாணிகளை (ளின்) பொருள்களையும் நகைகளையும் கொள்ளையடிக்கிருர்கள்.

13 कृष्णः सायंकाले वत्सान् गोकुलं अनयत् ।

கண்ணன் மாலையில கன்றுகளை கோகுலத்தை அடையச்செய்தான்

14 रावणः सन्यासिवेषेण आगत्य सीतां लंकां अहरत् ।

ராவணன் ஸந்யாஸ வேஷத்தில் வந்து ஸீதையை லங்கைக்கு அபஹரித்துச் சென்ருன்.

15 दुःशासनः द्रौपदीं राजसभां अकर्षत् ।

துச்சாதனன் துரௌபதியை அரசவைக்கு இழுத்துச் சென்ருன்.

16 भृतकः मम मूतं उन्दुस्थानं वहति ।

கூலியாள் என் மூட்டையை பேருந்து நிலையத்திற்கு தூக்கிச் செல்கிருன்.

இந்த 16 வாக்கியங்களில் இரண்டு செயப்படுபொருள்கள் இருப்பதைக் காணலாம். கோடிட்டுக்காட்டப்பெற்றவை முக்கிய கர்மா. நேரிடை வினைத் தொடர்புள்ள செயப்படுபொருள். (Direct object) கோடிடப்பெருத இரண்டாம் வேற்றுமையிலுள்ள மற்றவை நேரிடைவினைத் தொடர்பில்லாத செயப்படுபொருள்கள் கௌணகர்மா (Indirect object). இவ்வாக்கியங்களைக் கர்மணி பிரயோகமாக மாற்றுவதானல், எந்த செயப்படுபொருளை முதல் வேற்றுமைக்கு மாற்றுவது ? எந்த செயப்படு பொருளைத் தழுவி வினைச்சொற்கள் வரும் என்ற கேள்விகள் எழும். இதற்கு விடை—(1) दुह् முதல் मुष् வரை உள்ள 12 தாதுக்கள் உபயோகிக்கப் பட்ட வாக்கியங்களில் நேரிடைத்தொடர்பில்லாத செயப்படு பொருள்கள்—கௌணகர்மா (கோடிடப்பெருதவை) முதல் வேற்றுமையை ஏற்கும். அதன் புருஷ-வசனங்களையொட்டி வினைச் சொற்கள் புருஷ வசனங்களை ஏற்கும். (2) नी हृ, कृष्, वह्—என்ற நான்கு தாதுக்கள் உபயோகப்படும்போது மூக்கியமான செயப்படுபொருள்கள்—முக்கியகர்மா (கீழ்கோடிட்டவை) முதல் வேற்றுமையை ஏற்கும். உதாரணம்.

1 गोपालः गां पयः दोग्धि। (கர்தரி)
गोपालेन गौः पयः दुह्यते। (கர்மணி)

2 विश्वामित्रः दशरथं रामं अयाचत। (கர்த்தரி)
विश्वामित्रेण दशरथः रामं अयाच्यत।
(अ+याच्+य+त) (கர்மணி)

இங்கு வினைச்சொற்களான दुह्यते अयाच्यत என்பவைகளின் பயன் (effect) பசுவிடமும் தசரதரிடமும் ஏற்பட்டதே தவிர, பால் ராமன் இவைகளுடன் ஏற்படவில்லை. எனவே பசுவும் தசரதரும் முதல் வேற்றுமையில் மாறுகின்றன. இனி மற்ற உதாரணங்கள் மாறுவதைப் பார்ப்போம்.

3 पाचकेन तण्डुलाः ओदनं पच्यन्ते। (पच्+य+अन्ते)

4 न्यायाधिपेन अभियुक्तः शतं रूप्यकाणि दण्ड्यते स्म। (दण्ड्+य+ते)

5 अपरिचितेन केनचित् यूरोपगामि विमानं देशान्तरं अनीयत। (अ+नी+य+त)

இங்கு विमानं எனும் செயப்படுபொருள் நபும்ஸகலிங்கமானதால் இரண்டாம் வேற்றுமையிலிருந்து முதல் வேற்றுமைக்கு மாற்றப் பட்டிருந்தாலும் அந்த வேற்றுமைக்கான வித்யாஸம் தெரியவில்லை.

6 आचार्येण माणवकः षट् प्रश्नान् अपृच्छ्यत।
(अ+प्रच्छ्+य+त)

7 वृक्षारोहेण दश वृक्षाः फलानि अवाचीयन्त।
(अव+अ+ची+य+अन्त)

स्त्रीभिः आरामेषु चायावीरुधः चायांकुराणि अवचीयन्ते (अव+ची+य+अन्ते) இங்கும் முதல்-இரண்டாம் வேற்றுமை வேறுபாடு தெரியவில்லை. वीरुध् वीरुधौ वीरुधः, वीरुधं वीरुधौ वीरुधः, वीरुधा वीरुद्भ्यां वीरुद्भिः என்று முதல் மூன்று வேற்றுமைகள்.

8-9 आचार्येण अन्तेवासी हितं उच्यते/शिष्यते।
(ब्रू என்ற தாது கர்மணி பிரயோகத்தில் वच् என்று முதலில் மாறிப் பிறகு उच् என மாறும். (उच्+य+ते) அதேபோல் शास् என்பதும் शिष् என மாறும் (शिष्+य+ते)

10 शकुनिना सहकृतेन दुर्योधनेन धर्मपुत्रः राज्यं भ्रातॄन् पत्नीं द्रौपदीं च अजीयत। (अ+जी+य+त)

11 विष्णुना क्षीरसमुद्रः सुधां मथ्यते स्म। (मथ्+य+ते)
यशोदा दधि नवनीतं अमथ्यत। (अ+मथ्+य+त)
तैलकारेण खर्परा तैलं मथ्यते।

12 अद्यत्वे धूमशकटेषु लुण्टाकैः यात्रिणः, धनानि भूषणानि च मुष्यन्ते। (मुष्+य+अन्ते) यात्री यात्रिणौ यात्रिणः, यात्रिणं यात्रिणौ यात्रिणः என்பது சப்தம்.

13 कृष्णेन सायंकाले वत्साः गोकुलं अनीयन्त।
(अ+नी+य+अन्त)

14 रावणेन सन्यासिवेषेण आगत्य सीता लंकां अह्रियत।
(अ+ह्रि+य+त)

15 दुःशासनेन द्रौपदी राजसभां अकृष्यत।
(अ+कृष्+य+त)

16 भृतकेन मम सूतः उन्दुस्थानं उह्यते। (उह्+य+ते)
वह् எனும் வினை उह् என மாறுகிறது.

13–14–15–16 வாக்கியங்களில் வினைச்சொல்லின் பயன் முக்கிய கர்மாவுடன் சேர்கிறது. கௌண கர்மாவில் சேர்வதில்லை.

---

## தபாலில் பாடம் எழுதி அனுப்புபவர்கள் கவனத்திற்கு

1. தபாலில் அனுப்பப்பெறும் பாடங்களை உடன் திருத்தி அனுப்பி விடுகிறோம். 2. சிலர் "பயிற்சிகள்-மொழிபெயர்ப்புகள் எழுதத் தெரிய வில்லை. நீங்களே எழுதி அனுப்புங்கள்" எனக் குறிப்பிடுகிறார்கள். அவர்களுக்கு முழுபாடத்தின் மொழி பெயர்ப்பையும் எழுதி அனுப்ப நேரிடுவதால் தாமதமாகிறது. இத்தாமதம் பொறுத்துக் கொள்ளத்தக்கதே. 3. தபாலில் தாமதமாக வருபவை சில. அங்கும் தாமதம் தவிர்க்க முடியாததே. 4. சிலர் தமது எண், முகவரி போன்ற எதனையும் எங்கும் குறிப்பிடுவதில்லை. சிலர் எமது முகவரியை எழுதும் சுற்றுத்தாளில் மட்டும் தமது எண், முகவரியை எழுதி உள் எழுத மறந்துவிடுகிறார்கள். சிதைந்து வரும் சுற்றுத்தாளிலிருந்து பாடம் அனுப்பியவரைப் பற்றி ஒன்றும் அறிய முடிவதில்லை. அதனால் திருத்தப்பட்டும் திருப்பி அனுப்ப முடியாதபடி பல பாடக்குறிப்புகள் இங்கு தங்கியுள்ளன. பாடம் அனுப்பி திருத்தித் திரும்பிப் பெறாதவர்கள் தாங்கள் எழுதியனுப்பிய பாடம் எண் முதலிய வற்றைக் குறித்து விபரம் அனுப்பினால் கண்டுபிடித்து அனுப்புகிறோம். 5. தபாலில் அனுப்பியவை வந்து சேர்வதில்லை என்ற ஓர் நிலையும் உண்டு. நீங்கள் அனுப்பும்போதோ நாங்கள் அனுப்பும்போதோ தபால் தவறி வராதிருக்கக்கூடும். 10-15 நாட்களுக்குள் பாடத்தைத் திரும்பப்பெறாத வர்கள் மறுபடி அந்தப்பாடத்தை எழுதி அனுப்பினால் நல்லது.

Printed by S. Naganathan, at Theni Printers, Trichy, Edited by Vaidya S. V. Radhakrishna Sastri and Published by A. Kuppuswamy, B. A., B. T., on behalf of the Samskrit Education Society, (Regd.) Trichy Branch : 9, Single Mall Street, Tiruchirapalli-620 002.